# பகவத் பாதை

# BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 6 | இதழ் 5 | ஜுலை 10, 2019 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 6 | Issue 5 | July 10th, 2019 | Annual Subscription Rs. 100/-



| ஆன்மாவை அறிவது எவ்வாறு?

## பகவத் பாதை தமிழ் மாத இதழ்

தி

"தோன்றி மறையும் ஆனாத்மாவான மன உணர்ச்சிகளை நிரந்தரப்படுத்தும் தேவையற்ற போராட்டத்தினால் தான் அனைத்துப் பிரச்சினைகளும் உருவாகின்றன என்று புரிந்து கொள்வதுதான் ஞானம்.

அக உணர்ச்சிகளை பொறுத்தவரையிலும் செய்வதற்கு எதுவும் இல்லை என்று புரிந்துகொண்டு போராட்டத்தை கைவிட்ட நிலையில் நம் மன இயக்கம் சுதந்திரப் பிரவாகமாக ஓர் உயிருள்ள ஆற்றைப் போல் கள்ளங்கபடமற்ற குழந்தைபோல் இயங்க ஆரம்பிக்கின்றது.

– ஸ்ரீ பகவத்

# ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான முகாம்

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ)
பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission


31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075




**நாள்**

| 15.8.2019 | 18.8.2019 |
|---|---|
| காலை 11.00 மணிமுதல் | மதியம் 3.00 மணிவரை |

| விபரம் | செலவு பகிர்வு |
|---|---|
| **4 நாள் ஞான முகாம்**<br>இடம் : ஸ்ரீ பகவத் பவன், சேலம். | ரூ. 3000/- மட்டும். |

முன்பதிவிற்கு

**ஸ்ரீ பகவத் மிஷன்,**
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.
**79041 18421, 99942 05880, 97891 65555**

# ஆன்மாவை அறிவது எவ்வாறு?


- ஸ்ரீ பகவத்

நாம் எதையாவது ஒன்றை அறிவதாக இருந்தால் எப்படி அறிந்து கொண்டிருக்கிறோம்?

காற்றில் பிரம்மாண்டமான மரம் ஒன்று தனது கிளைகளை அசைத்து கொண்டிருக்கிறது நமது கண்களால் அதனை அறிகிறோம்.

குயில் ஒன்று தனது இனிய குரலால் கூவிக் கொண்டிருக்கிறது. நாம் நமது செவி புலன்களால் இதனை அறிகிறோம்.

நமக்கு மகிழ்ச்சியோ, வருத்தமோ, பயமோ, கோபமோ ஏற்படும்போது அவற்றை நமது மனதின் மூலமாக அறிகிறோம்.

இப்படி நாம் எதையாவது அறிவதாக இருந்தால் அதனை நமது புலன்களின் மூலமாகவோ அல்லது மனதின் மூலமாகவோ தான் அறிந்தாக வேண்டும். இவற்றைத் தவிர எந்த வழியுமே கிடையாது.

ஆனால் ஆன்மாவை புலன்களாலும் மனத்தாலும் அறிய முடியாது என்று மகான்கள் கூறிவிட்டனர்.

அதே நேரம் ஆன்மாவை அறிந்து கொள்ளாமல் நமது பிரச்சினைகள் தீர்த்திட வழியே இல்லை என்றும் கூறிவிட்டார்கள்.

ஆன்மாவை அறியும் வழிகளையும் அவர்கள் கூறவில்லை. என்னதான் செய்வது?

சாஸ்திரங்கள் மட்டும் ஆன்மாவை அறிவதற்கான வழியை கூறுகின்றன.

"ஆன்மாவை கொண்டு ஆன்மாவை அறிக..."

- இவ்வாறு சாஸ்திரங்கள் ஆன்மாவை அறிவதற்கான வழியை கூறுகிறது.

ஆன்மா என ஒன்று நம்மிடம் இருப்பதே நமக்கு தெரியாது. இந்நிலையில், "ஆன்மாவை வைத்தே ஆன்மாவை தெரிந்துகொள்" என்றால் என்ன அர்த்தம்?

நமது வீட்டில் இருந்து ஏதோ வேலையாக வெளியே சென்ற ஒருவர் வீடு திரும்பவில்லை. தெரிந்தவர்களிடம் எல்லாம் விசாரித்துப் பார்த்தும் எந்த விபரமும் கிடைக்கவில்லை. கடைசியாக காவல் நிலையத்தில் சென்று புகார் செய்கிறோம்.

நாம் கூறிய விவரங்களை எல்லாம் பொறுமையாக கேட்கும் காவல் அதிகாரி, "காணாமல் போனவர் கடைசியாக எந்த ஊருக்குப் போனார் என்று யாருக்காவது தெரியுமா?" என்று கேட்கிறார்.

"ஒரே ஒருவருக்கு மட்டும் தெரியும்" என்கிறோம்.

"யார் அவர்?" என அவர் கேட்க, "காணாமல் போயிருக்கிறாரே... அவர்தான்!" என்று அவருக்கு பதில் அளிக்கிறோம் என்று வைத்துக் கொள்வோம். அந்த அதிகாரி என்ன ஆவார்? நம்மை உண்டு இல்லை என ஆகிவிட மாட்டாரா?!

ஆன்மாவை கொண்டு ஆன்மாவை அறிவது இவ்வாறுதான் உள்ளது.

அந்தத் தெருவில் ஏதோ ஒரு சண்டை நடந்து கொண்டிருந்தது.

கூச்சல் சிறுக சிறுக தீவிரமடைந்தபடி இருந்தது. இதே நிலை நீடித்தால் இன்னும் சற்று நேரத்தில் அங்கு கலவரம் வெடிக்கும் அபாயம்!

சண்டையில் ஈடுபட ஒருவருடைய கவனம் திடீரென வேறு ஒரு திசையில் ஈர்க்கப்பட்டது. யாரோ ஒருவர் மின் கம்பத்தில தனது இரண்டு காதுகளையும் மாற்றி மாற்றி வைத்து கேட்டுக் கொண்டிருந்தார்.

அவர் அப்படி எதைக் கேட்க முயல்கிறார் என்பது எவருக்கும் புரியவில்லை. கொஞ்சம் கொஞ்சமாக அவரைச் சுற்றியும் ஒரு கும்பல் கூட ஆரம்பித்து விட்டது.

அந்த நபரும் யாரையும் கண்டுகொள்ளாமல் மின் கம்பத்தில் காதுகளை மாற்றி மாற்றி வைத்து எதையோ கேட்பதிலேயே தீவிரமாக இருந்தார்.

அவரை வேடிக்கை பார்த்த வேறு ஒருவர் அவருக்கு பக்கத்தில் சென்று அவரைப் போலவே மின்

கம்பத்தில் காதுகளை மாற்றி மாற்றி வைத்து கேட்டுப் பார்த்தார். எதுவும் கேட்கவில்லை.

அவரைப்போலவே உடன் இருந்த பலரும் மின்கம்பத்தில் காதுகளை வைத்து கேட்க முயற்சி செய்தனர். எவருக்கும் எதுவும் கேட்கவில்லை.

"மின்கம்பத்தில் அப்படி என்னதான் கேட்டுக் கொண்டு இருக்கிறீர்கள்? எங்களுக்கு எதுவும் கேட்கவில்லையே? என்று முதல் நபரிடம் அனைவரும் கேட்டனர்.

கம்பத்தில காது வைத்துக் கேட்க முயற்சி செய்த முதல் நபர் இவர்கள் அனைவரையும் முழுவதுமாக பார்த்துவிட்டுச் சொன்னார்..."ஒரு மணி நேரமாக முயற்சிக்கும் எனக்கே எதுவும் கேட்கவில்லை. இப்போதுதான் வந்த உங்களுக்கு எப்படி கேட்கும்?"

இப்போது இவர்களை வேடிக்கை பார்க்கமேலும் கும்பல் பெருக ஆரம்பித்துவிட்டது. கைகலப்பில் முடிய வேண்டிய அந்த தெருச் சண்டை வாய்ச்சண்டையோடு முடிவுக்கு வந்துவிட்டது.

ஆன்மாவை நோக்கிய பயணம் இப்படிதான் உள்ளது. ஆன்மாவை அறிய முடியாவிட்டாலும் கூட அறிவதற்கான முயற்சி நன்மையிலேயே முடிகிறது.

ஆன்மா என்று எதுவுமே கிடையாதா? "ஆன்மாவை கொண்டு ஆன்மாவை அறிக" என்று கூறி சாஸ்திரங்கள் நம்மை ஏமாற்றுகின்றனவா?

ஆன்மா தான் உண்மையானது என்று கூறிவிட்டு, அதை அறிய முடியாது என்றும் கூறி விடுகிறது. ஏன் இந்த குளறுபடி?

ஆன்மா என்றால் என்ன?

ஆன்மாவை உணர்வுநிலை, சித் அம்சம், பிரக்ஞை, தன்னறிவுள்ள நிலை, இருப்புநிலை, Awareness என்று பல பெயர்களிட்டு சாஸ்திரங்கள் குறிப்பிடுகின்றன.

ஆன்மா தான் ஆதார உணர்வு நிலை - Awareness என்று அழைக்கப்படுகிறது. அதிலிருந்து வெளிப்படுபவை அனைத்தும் உணர்ச்சி நிலை அல்லது Consciousness என்று அழைக்கப்படுகின்றன.

நமது நாவில் இனிப்பு பதார்த்தம் ஒன்றை போடுகிறோம். நமது நாக்கே இனிப்பாக மாறி இனிப்பை காட்டுகிறது.

நாவில் கசப்பான மருந்து ஒன்றை கொட்டுகிறோம். நம் நாக்கு கசப்பாகமாறி கசப்பை காட்டுகிறது.

இங்கே என்ன நடக்கிறது?

நமது நாக்கு ஓர் அறியும் தன்மையுடன் - உணரும் தன்மையுடன் இருக்கிறது. அந்தத் தன்மை தான் இனிப்பாகவும் மாறுகிறது. கசப்பாகவும் மாறுகிறது.

இனிப்பாக மாறிய உணரும் தன்மையை நாம் அறிகிறோம். கசப்பாக மாறிய உணரும் தன்மையையும் நாம் அறிகிறோம். எந்த மாற்றத்தையும் அடையாத உணரும் தன்மையை நம்மால் அறிய முடியாது. நாக்கினுடைய உணரும் தன்மை எப்படி இருக்கிறது என்று எவருக்குமே தெரியாது.

ஆனால் அதுதான் உண்மையாகவும் இருக்கிறது. அதுதான் எல்லா சுவைகளுக்கும் ஆதாராமாகவும் இருக்கிறது.

சுவையான உணவு எதையும் நாவில் போடாது இருக்கும்போது நமது நாக்கு என்ன சுவையோடு இருக்கும்? அது எந்த சுவையையும் காட்டாமல் இருப்பது தெரியாமல் இருந்து கொண்டிருக்கிறது.

அந்த அடிப்படை இருப்பு உணர்வு தான் பிரக்ஞை - Awareness ஆகும்.

அதனால் தான் சாஸ்திரங்கள் "ஆன்மாவை கொண்டு ஆன்மாவை அறிக" என்கின்றன.

ஆன்மா என்பதற்கு ஏன் முக்கியத்துவம் தர நேர்ந்தது?

"ஆன்மா தான் உண்மையானது, நித்தியமானது என்பதை புரிந்து கொள்ள வேண்டும். அதே போல் அனாத்மா பொய்யானது என்பதையும் புரிந்து கொள்ள வேண்டும்" என்கின்றன சாஸ்திரங்கள்.

ஆன்மா சரி... அது என்ன அனாத்மா?

ஆன்மா அல்லாதது அனைத்தும் அனாத்மா என்று கூறப்படுகிறது.

உயிரற்ற ஜடப் பொருட்களான கல், மண், மலை போன்றவற்றை நாம் ஆத்மா என்று கூறலாமா?

சாஸ்திரங்கள் அப்படிக் கூறவில்லை.

நீங்கள் ஓர் இருட்டு அறையில் உட்கார்ந்து இருக்கிறீர்கள். வெளிச்சம் இல்லாததால் அறையில் இருக்கும் எந்தப் பொருளும் உங்களுக்கு புலப்படவில்லை.

ஒரு மெழுகுவர்த்தியை கொண்டு வருகிறோம். மெழுகுவர்ததியின் வெளிச்சத்தில் அருகில் இருக்கும் பொருட்கள் எல்லாம் புலப்படுகின்றன. எல்லா பொருட்களையும் பார்ப்பதற்கு மெழுகுவர்த்தி தேவைப்படுகிறது.

ஆனால், அந்த மெழுகுவர்த்தியை நாம் பார்க்கவேண்டுமானால், அதைக் காட்டுவதற்கு இன்னுமொரு மெழுகுவர்த்தி தேவைப்படுமா?

அறையில் இருக்கும் பொருட்களை எல்லாம் காட்டும் மெழுகுவர்த்தியானது, தனது வெளிச்சத்தில் தன்னையும் காட்டிக் கொள்கிறது.

இப்படி எதுவெல்லாம் தன்னுடைய சுய தன்மையால் தன்னையே காட்டிக்கொள்கிறதோ அதைத்தான் உணர்ச்சிநிலை அல்லது Consciousness என்று கூறுகிறோம். அதுவெல்லாம் சுய ஒளியுடையது.

இதைப்போன்று நமது காலில் வலி ஏற்படுவதாக வைத்துக் கொள்வோம். மனதில் இன்ப துன்ப உணர்ச்சிகள் ஏற்படுவதாக வைத்துக் கொள்வோம். இதனைத்தான் Consciousness என்கிறோம்.

இதனை காட்டுவதற்கு வேறு ஏதாவது தேவையா?

இவைகள் தங்களை சுயமாக வெளிக் காட்டிக் கொள்கிறது. இவைகளை வேறு எதைக் கொண்டும் மறைத்து விட முடியாது.

அப்படியெனில் அவை சுய ஒளி உடையவையா? சுய விளக்கம் உடையவையா?

இவை சுய ஒளி உடையது போல் தோன்றினாலும், உண்மையில் ஆன்மாவின் ஒளியைக் கொண்டே இவை இருப்பு தன்மை உடையதாக தோற்றமளிக்கின்றன.

நாக்கில் ஏற்படும் இனிப்பு மற்றும் கசப்பு உணர்ச்சிகள், இருப்பு தன்மை உடையது போல் தோன்றினாலும் நாக்கினுடைய உணரும் தன்மை தான் அவற்றுக்கு காரணமாக உள்ளது. அதுதான் உண்மையான இருப்பு நிலை.

இதுபோல் நமக்கு ஏற்படும் மன உணர்ச்சிகள் சுயமாக வெளிப்பட்டாலும், இருப்பு தன்மை உடையது போல் தோன்றினாலும் உண்மையில் அவை தற்காலிகமானவையே, தோன்றி மறையும் தன்மை உடையவையே. மன உணர்ச்சிகள், அனுபவங்கள் அனைத்தும் நித்தியமான ஆன்மாவின் வெளிப்பாடுகளே.

தோன்றி மறையும் மன உணர்ச்சிகளை நிரந்தரப்படுத்தும் தேவையற்ற போராட்டத்தினால்தான் அனைத்துப் பிரச்சினைகளும் உருவாகின்றன.

அவை அனைத்தும் கானல் நீரை போன்றவைதான் - நிழல்களை போன்றவைதான் என்பதை புரிய வைக்கவே சாஸ்திர ரீதியான இந்த அணுகுமுறை தோன்றியது.

ஆன்மாவுக்கு முக்கியத்துவம் கொடுப்பது போல் செயல்பட்டு உணர்ச்சிகளிலிருந்து அனுபவங்களிலிருந்து Consciousness லிருந்து விடுபட வைப்பது தான் இதன் நோக்கம்.

உணர்ச்சிகள், அனுபவங்கள் அனைத்திற்கும் ஆதாரமான உணர்நிலை - Awareness என ஒன்று உள்ளது என்பதை புரிந்து கொண்டால் மட்டும் போதும்.

ஆனால் பலரும் தங்களது உணர்ச்சிகளின் வழியாக அந்த ஆதார உணர்நிலையை - ஆத்மாவை அறிந்து கொள்ள போராடி தங்களது வாழ்க்கையை இழந்து விடுகின்றனர்.

உண்மையில் நம்முடைய மனதின் செயல்பாடுகள் என்ன என்று அறிந்து கொள்வது மட்டுமே நமக்கு தேவைப்படுகிறது.

ஞானம், அஞ்ஞானம் அனைத்தும் நம் மனதோடு தொடர்பு கொண்ட ஒன்றே ஆகும். ஆக, மனதில் தான் அஞ்ஞானம் உள்ளது. மனது தான் அஞ்ஞானத்தில் இருந்து விடுபட வேண்டும்.

இதை நேரடியாக கூறுவதை விடுத்து ஆன்மா என்றொரு புதிரையும் இணைத்து விட்டார்கள்.

அந்த விவசாயிக்கு ஒரு ஏக்கர் நிலம் இருந்தது. அதில் பாடுபட்டு தன் குடும்பத்தை செழிப்பாக வாழ வைத்தான். அவனுக்கு ஒரே மகன். செல்லமாக வளர்ந்தவன். உழைக்காமல் சோம்பேறி ஆகிவிட்டான்.

அந்த விவசாயிக்கு வயதாகிவிட்டது. மரணப் படுக்கையில் இருந்த அவன் தன் மகனை அழைத்துக் கூறினான். "மகனே, நான் சேர்த்து வைத்த பணத்தை எல்லாம் தங்க காசுகளாக மாற்றி நமது நிலத்தில் ஐந்து மண்பானைகளில் போட்டு புதைத்து உள்ளேன். அவை நம் நிலத்தினுள் பல இடங்களிலுமாக உள்ளன. யாரும் எடுத்து விடக் கூடாது என்பதற்காக ஆழமாக குழிதோண்டி புதைத்து உள்ளேன். நீ ஏர் பூட்டி இரண்டு அடி ஆழத்தில் நிலத்தை உழுவாயானால் அந்த பானைகளின் வாய்ப்பகுதி தட்டுப்படும். அதை தோண்டினால் உனக்குத் தங்கப் புதையல்கள் கிடைக்கும். எந்த பானையில் எவ்வளவு போட்டுள்ளேன் என்பது எனக்கு மறந்து விட்டது. எவரையும் உதவிக்கு வைத்துக் கொள்ளாதே. புதையலில் பங்கு கொடுக்க வேண்டியது ஏற்படும்."

- இப்படி கூறிவிட்டு அவர் இறந்து விட்டார்.

ஒரு நாள் நல்ல மழை. மறுநாள் விவசாயிகள் அனைவரும் தங்களுடைய வயல்களை உழவு செய்ய ஆரம்பித்தார்கள். விவசாயி மகனும் தனது வயலில் உழவு செய்தான். சில இடங்களில் மண் பானைகள் இடறின. தோண்டிப் பார்த்தால் பானையின் உள்ளே எதுவும் கிடைக்கவில்லை.

வயல் முழுவதும் உழுது போட்டு விட்டான். ஐந்து பானைகளும் கிடைத்துவிட்டன. ஆனால் எந்த பானையிலும் எதுவுமே இல்லை. மனமுடைந்து சோர்ந்து போய் விட்டான்.

மற்ற விவசாயிகள் ஆறுதல் கூறி உழுது போட்ட நிலத்தில் தானியத்தை விதைக்குமாறு கூறினார்கள்.

இவனும் தானியத்தை விதைத்தான். தேவைக்கேற்ப மழை பெய்தது. எல்லா விவசாயிகளையும் விட இவனுடைய வயலில்தான் அதிகமான விளைச்சல் கிடைத்தது.

இப்படி ஆன்மா என்ற பெயரில் ஆசை காட்டி மனதை புரிந்து கொள்ளவே மகான்களும் தூண்டுகின்றனர். சாஸ்திரங்களும் தூண்டுகின்றன.

தோன்றி மறையும் அனாத்மாவான மன உணர்ச்சிகளை நிரந்தரப்படுத்தும் தேவையற்ற போராட்டத்தினால்தான் அனைத்துப் பிரச்சினைகளும் உருவாகின்றன என்று புரிந்து கொள்வதுதான் ஞானம்.

இப்படி தோன்றி மறையும் அனாத்மாவான அக உணர்ச்சிகளை பொறுத்தவரையிலும் செய்வதற்கு எதுவும் இல்லை என்று புரிந்துகொண்டு போராட்டத்தை கைவிட்ட நிலையில், நம் மன இயக்கம் சுதந்திரப் பிரவாகமாக ஓர் உயிருள்ள ஆற்றைப் போல் கள்ளங்கபடமற்ற குழந்தைபோல் இயங்க ஆரம்பிக்கின்றது.

மனதை புரிந்து கொண்ட ஞானிகள் அனைவரும் விடுதலை அடைகின்றனர். தங்களது பிரச்சினைகள் அனைத்திலிருந்தும் விடுபடுகின்றனர். ★

V.A.P. **சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி? பதில்...

## "புறத்தில் வெற்றி அடைய என்ன செய்ய வேண்டும்"

**கேள்வி :** எனது முன்னோர்கள் சேர்த்து வைத்த சொத்துக்களை பங்கிட்டுக் கொள்வதில் எனது உடன் பிறந்த சகோதரர்கள் தங்களுக்குள்ளே தனித்தனியாக ஒருவரின் பெயரில் மற்றொருவர் கோர்ட்டில் வழக்கு தொடர்ந்து இருக்கிறார்கள். இதனால் யாராலும் மூதாதையரின் சொத்தை அனுபவிக்க முடியவில்லை. கிட்டத்தட்ட 20 ஆண்டுகளாக வழக்கு தொடர்ந்து நடந்து கொண்டே இருக்கின்றது. கோர்ட்டுக்கு நடந்து என் கால் முட்டி தேய்ந்து போனது தான் மிச்சம். மன வேதனையை என்னால் தாங்க முடியாத நிலையில்தான் பகவத் ஐயாவின் மனதைப் பற்றிய புரிதலை youtube வாயிலாக அறிந்து கொண்டேன். அகம் புறம் பற்றி ஓரளவிற்கு புரிந்து மன அமைதியை பெற்றிருக்கிறேன். புறத்தில் வெற்றியடைய அகத்தை புறக்கணித்தால் மட்டும் போதுமா? இன்னும் வேறு ஏதாவது செய்ய வேண்டுமா? மேற்கண்ட வழக்கை முடிவுக்கு கொண்டுவர நான் என்ன செய்ய வேண்டும்?

**பதில் :** உங்களுடைய 20 வருட மனத்துயரத்தை நன்றாக உணர முடிகிறது. பகவத் ஐயாவின் அகம்-புறம் பற்றிய விளக்கத்தை ஓரளவிற்கு நீங்கள் புரிந்து இருப்பதினால்தான் ஏதோ ஓர் அளவில் மன அமைதி அடைந்திருக்கிறீர்கள். பகவத் ஐயாவின் மற்ற நூல்களை படிப்பதும், ஞான முகாம் வகுப்பு ஒன்றில் நேரடியாக கலந்து கொள்வதன் மூலமும் அகம் புறம் பற்றிய தெளிவில் மேலும் உறுதி ஆகி விடுகிறீர்கள். பிறகு இந்த பிரச்சினையை எப்படி எதிர்கொள்வது என்பது உங்களுக்கே தெரிந்துவிடும்.

வாழ்க்கையில் பிரச்சினை என்பது அனைவருக்கும் உண்டு. அதனை எதிர்கொள்ளும் மனநிலையை கீழ்க்காணும் இரண்டு வகைகளாக பிரித்து புரிந்து கொள்ளலாம். இந்த இரண்டில் ஏதோ ஒன்றை மட்டும் தான் நாம் சுகமான வாழ்க்கை வாழ்வதற்கு தேர்ந்தெடுக்க வேண்டும் என வைத்துக் கொள்வோம்.

இனி அந்த இரண்டு வகையான மனதின் அணுகுமுறை என்ன என்பதை பார்ப்போம்.

ஒன்று, புறவாழ்க்கையில் தேவைக்கு மிகுதியான வசதியும், ஆனால் மனதில் மட்டும் அமைதியின்றி சதா மனக் கொந்தளிப்பிலும் போராட்டத்திலும் சிக்கித் தவிக்கும் நிலை.

மற்றொன்று, புற வாழ்க்கையில் அடிப்படை வசதிகள் கூட இல்லாமல் இருந்தாலும் மனதில் மட்டும் எல்லாவற்றையும் தீரத்துடன் எதிர்கொள்ளும் வல்லமை கொண்ட மனோதிடம் இருக்கும் நிலை.

இந்த இரண்டு விதமான அணுகுமுறைகளில், நாம் எதைத் தேர்ந்தெடுப்போம்?

நம்மில் பெரும்பாலோனோர் இரண்டாம் நிலையை மட்டும் தான் தேர்ந்தெடுப்போம். அது ஏன்?

புற வாழ்க்கையில் வசதிகள் இல்லாமல் கூட நம்மால் வாழ்ந்து விட முடியும். ஆனால் மன நிம்மதியின்றி ஒரு நிமிடம் கூட நம்மால் வாழவே முடியாது.

மன அமைதி புற வாழ்க்கை வசதிகளை விட பல மடங்கு உயர்வானது என்பதை நாம் நன்றாக புரிந்து இருக்கின்றோம். நமக்கு வாழ்க்கையில் ஏற்படும் அத்தனை நிகழ்வுகளையும் நாம் நம் மனதின் வழியாக மனோ மயமாக்கப்பட்டு **அனுபவமாக** தான் அதை புரிந்து கொள்கின்றோம்.

மனம் என்பது தாமாக இயங்கும் சுதந்திரமான விடுதலை இயக்கம். இப்படி மனதின் சுதந்திரமான மன இயக்கத்தில் நமது அறிவுப் பகுதிக்கு யாதொரு வேலையும் இல்லை என்பதை புரிந்து கொள்வதே ஞானம். சுதந்திரமான அக இயக்கத்தில் நாம் செய்வதற்கு என்று எதுவும் இல்லை. நம்மால் அங்கு எதுவுமே செய்யவும் முடியாது என்பதை காரண காரியத்துடன் சந்தேகத்திற்கு இடமில்லாமல் விளங்கிக் கொள்ள வேண்டும். இப்படி அகத்தில் செய்வதற்கு எதுவுமே இல்லை என்பதை முழுமையாக விளங்கிக்கொள்ளும் போது மனதின் அகபகுதியை ஒட்டுமொத்தமாக நாம் தாழிட்டு மூடி விடுகிறோம்.

அகத்தில் நமக்கு வேலையே இல்லை என்பதினால் இனி எஞ்சியிருக்கும் பகுதியான புறத்தில் என்ன செயல் செய்ய வேண்டும் என்பதை சிந்திப்போம்.

புறத்தை கையில் எடுப்பதினால் ஒரு முறைக்கு பலமுறை முயன்று பார்க்கும் தன்மைக்கு நாம் வருவோம். நமது முயற்சியில் தோல்வியே ஏற்பட்டாலும்கூட புறத்தில் புதிய அணுகுமுறையில் முயற்சி செய்யும் வாய்ப்பு நாம் நம் மன இயக்கத்தின் சுதந்திரத்தில் தலை இடாமல் இருந்தால் மட்டுமே கிடைக்கும்.

புறத்தில் இருக்கும் சூழ்நிலையையும் மற்றவர்களையும் நம் அறிவைக் கொண்டு தான் எதிர் கொள்ள வேண்டும். நம் அகத்தை பொறுத்த அளவில் மனதில் நிறை குறை என்ற பிரிவினை எதுவுமின்றி அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டும்.

புறம் என்பது செயல் வடிவமானது. நாம் புறத்தில் வெற்றி பெறுவதற்கு நமக்கு என்னென்ன சாத்தியக்கூறுகள் உள்ளன என்பதை ஆராய வேண்டும். பிறகு அதனை ஒவ்வொன்றாக முயன்று பார்க்க வேண்டும். முயன்று பார்ப்பது ஒன்று மட்டுமே புறத்தில் வெற்றி பெறுவதற்கான வாய்ப்பினை அளிக்கும்.

இனி உங்களுடைய கோர்ட் வழக்குகளை புறத்தில் எவ்வாறு அணுகுவது என்பதை பற்றி சிந்திப்போம்.

உங்கள் உடன்பிறந்த சகோதரர்களில் நீங்கள் மட்டும் தான் வழக்கை முடிவுக்குக் கொண்டுவர வேண்டும் என்று எண்ணுகிறீர்கள்.

மற்றவர்கள் அனைவரும் "நான்" என்ற கர்வத்தையும் "எனது" என்ற பற்றையும் யாருக்காகவும் விட்டுக் கொடுக்க மாட்டேன் என்ற பிடிவாதத்தை மட்டுமே கெட்டியாக பிடித்து கொண்டிருக்கிறார்கள்.

உங்கள் செயல் வெற்றி பெற மன இயக்கத்தை புரிந்து கொண்ட நீங்கள் தான் உங்களுடைய பழைய அணுகுமுறையில் இருந்து புதிய அணுகுமுறையில் இந்த விஷயத்தை அணுக வேண்டும்.

உங்களது சகோதரர்களை தனித்தனியாக போனில் அழைத்து பேசுங்கள்.

அனைவரையும் ஒன்று கூட்டிப் பேசுவதற்கான ஒரு புற சூழ்நிலையை நீங்கள் தான் உருவாக்க வேண்டும். மற்றவர்கள் யாரும் இந்த முயற்சியை கொஞ்சம் கூட எடுக்க மாட்டார்கள்.

மூதாதையரின் சொத்தின் மதிப்பையும் அதில் ஒவ்வொருவருக்கும் கிடைக்கும் பங்கின் இன்றைய மதிப்பையும் தெரிவிக்கவும். இந்த 20 ஆண்டு காலமாக இந்த வழக்குக்காக செலவழித்த பணத்தையும், கோர்ட்டிற்கும் வக்கீலுக்கும் எவ்வளவு பணம் செலவழிந்தது என்பதையும் அழகாக பிரித்து கணக்கு காட்டுங்கள்.

இப்படி வகைப்படுத்திய விஷயங்களை அவர்களுக்கு புரியும் படி உங்கள் குடும்பத்தின் மீது அக்கறை உள்ள ஒரு பொது நபரை வைத்து இந்த தகவல்களை அனைவருக்கும் தெரிவிக்கவும்.

"பிடிவாதத்தினால் நாம் ஒருவருக்கு ஒருவர் தான் இந்த 20 ஆண்டு கோர்ட் வழக்குக்கு காரணம். நமது மூதாதையர் சொத்துக்களை நாம் அனைவரும் ஒன்று கூடி நமக்குள் ஒரு உடன்படிக்கையை ஏற்படுத்திக் கொண்டு சொத்துக்களை மகிழ்ச்சியாக அனுபவிக்கலாம்" என்ற இந்தத் தகவல்களை மற்றவர்களுடன் கூடி கலந்து பேசுங்கள். "இதற்கு நாம் ஒவ்வொருவரும் குறிப்பிட்ட ஓர் அளவிற்கு மட்டும் விட்டு கொடுத்தால் போதும்" என்று அனைவரும் ஏற்றுக் கொள்ளும் பொதுவான வழிமுறையை உருவாக்குங்கள். "20 ஆண்டுகளாக பிடிவாதத்துடனும் எதிர்பார்ப்புடனும் போராடியது போதும். இனி எஞ்சி இருக்கும் காலங்களில் நாம் நம் குழந்தைகளுடன் மகிழ்ச்சியாக வாழ்வோம். அதற்கு இந்த மூதாதையரின் சொத்து உதவியாக இருக்கும்" என்பதை தெரிவியுங்கள்.

"பல ஆண்டுகளாக எதிர்ப்பான மனநிலையுடன் நாம் செயல்பட்டு வந்துளோம். இனி அனைவரும் ஒன்று கூடி உடன்படிக்கையுடன் அவரவர்கள் பங்குகளில் மகிழ்ச்சியாக வாழலாம்" என்பதை காரண காரியத்துடன் வகைப்படுத்துங்கள்.

இந்த முயற்சிக்காக உங்களுக்கு வர வேண்டிய சொத்தின் ஒரு பகுதியை விட்டுக் கொடுத்து கூட இந்த வழக்குகளை முடிவுக்கு கொண்டு வர வேண்டிய நிலை ஏற்படலாம். இதை முழு மனதுடன் புறத்தில் எடுத்து செயல்படத் தொடங்கினால் நிச்சயமாக வழி கிடைக்கும்.

எத்தனை தோல்விகள் ஏற்பட்டாலும் அதனை அகத்தில் தோன்றி மறையும் உணர்வுகளாக எடுத்துக் கொள்ளுங்கள்.

இந்த விஷயத்திற்காக நீங்கள் முதலில் அழைக்கும் போது ஐந்து நபர்களில் இரண்டு பேர் உங்களுடன் சேர்ந்து கொள்ளும் வாய்ப்பு இருக்கிறது. அடுத்தடுத்த கட்ட தொடர் முயற்சியினால் ஒவ்வொருவரும் இணைந்து கொள்ள குறிப்பிட்ட கால இடைவெளி தேவைப்படலாம்.

இப்படியே தொடர்ந்து முயலும்போது சகோதரர்களாகிய நீங்கள் ஐந்து பேரும் ஒன்று கூடிப் பேசும் தன்மைக்கு வருவீர்கள். பிறகு கோர்ட்டில் இருக்கும் வழக்குகளை வாபஸ் பெற்றுக் கொண்டு, உங்களுக்குள் சுமூகமாக பேசி தீர்வு கண்டுவிடும் நிலைக்கு வந்து விடுவீர்கள்.

இத்தனை முயற்சிகள் எடுத்த பின்னும் தீர்வு அமையவில்லை எனில் பொறுமையாக காத்திருப்பதைத் தவிர வேறு எந்த வழியும் இல்லை.

மேற்கண்ட வழக்கு சம்பந்தமாக அகத்தில் நமக்கு எந்த வேலையும் இல்லை. புறத்தில் புதிய அணுகுமுறையில் முயன்று பார்ப்பது ஒன்றே வழி.

# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

அடைவதற்கு அரிதான ஞானமும் விடுதலையும் ஸ்ரீ பகவத் அய்யா அவர்களால் ஆர்வமுள்ள அனைவரும் அடையும் வண்ணம் மிகவும் எளிதாகி விட்டது.

ஞானம் என்னும் மனதின் மாபெரும் இரகசியத்தை அறிவியல் ரீதியாக வழங்கியதன் விளைவாக ஆன்மிகத்தின் ஆதி அந்தத்தையும் புரிய வைத்தவர் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்.

தற்போதைய பரபரப்பான சூழ்நிலையில் பிரச்சனைகளுக்கு மத்தியில் போராடிக் கொண்டிருக்கும் மக்களுக்கான தீர்வு ஸ்ரீ பகவத் ஐயா வழங்கும் ஞானத்தால் எளிதில் கிடைத்துவிடுகிறது.

உலகத்திற்கே விடிவெள்ளியாக விளங்கினாலும் உள்ளத்தில் கருணையும் அன்பும் கொண்டு அனைவரிடமும் இனிமையாகவும் எளிமையாகவும் பழகக் கூடியவர் பகவத் ஐயா அவர்கள்.

மகான்கள் எப்போதும் தங்களது சக்திகளை வெளிக்காட்டிக் கொள்ளவே விரும்புவதில்லை. ஆனால் இயற்கை ஒருபோதும் அவர்களை அடையாளம் காட்ட தவறியதில்லை.

ஜுன் மாதம் 15, 16 தேதிகளில் நடைபெற்ற ஞான உறுதி முகாமின் தொடக்க நாளில், மாலை நேர நடை பயிற்சியின் போது, ஐயாவுடன் அன்பர்களும் கலந்து கொண்டனர். கொடம்பக்காட்டின் உட்புறத்தில் நடந்துவிட்டு திரும்பும்போது பொள்ளாச்சி டாக்டர் மகேந்திரலிங்கம் கொடுத்தனுப்பிய அடர் வனத்தை உருவாக்கும் விதைப்பந்தை கோவை குணாளன் அவர்கள் ஐயாவிடம் கொடுத்து வீசச் சொன்னார். ஸ்ரீ பகவத் ஐயா அவர்களும் ஜருகுமலை வனப்பகுதியை சுற்றி வீசிவிட்டு வழக்கம் போல் தன் நடை பயிற்சியை தொடர்ந்தார். என்னதான் பகவத் ஐயா "நான் இதுவரை எந்த சக்திநிலையும் என்னிடம் இருப்பதாக உணர்ந்ததில்லை" என்று பலமுறை கூறி வந்தாலும் இயற்கை அவரை அடையாளம் காட்டாமல் இருந்ததே இல்லை.

இந்த மகானின் செயலை இயற்கை உணர்ந்து கொண்டு மின்னலை வெட்டி, இடி இடித்து வான் மழையை கொட்டி தீர்த்தது. விதைப்பந்தை வீசியவுடன் தொடங்கிய மழை இரண்டு மணி நேரத்தையும் கடந்து பூமியை குளிர்வித்து கொண்டிருந்தது. ஐயாவுடன் வந்த அனைத்து அன்பர்களும் உள்ளத்தில் குழந்தைகளாக மாறி தங்களது வயதையும் மறந்து உற்சாகத்தில் ஆடிப் பாடி குதூகலம் அடைந்தனர். நாம் செய்ய வேண்டிய செயல்களை முடிந்தவரை சரியாக செய்தால் இயற்கை நம்முடன் இணைந்து என்றும் நன்மையே செய்யும்.



மனதின் இயற்கையான இயக்கத்தை புரிந்து கொண்டு அதனோடு முரண்படாத போது மனப் பிரச்சினைகள் தாமாக தோன்றியது போல் தாமாக மறைந்துவிடும்.

அந்த புரிதலைக் கொடுக்கும் அய்யாவின் உரைகளை கேட்பவர்கள் அனைவருமே தங்களுக்குள் விடுதலையை உணர்கிறார்கள்.

அந்த வகையில் ஹைதராபாத்தில் ஜுன் மாதம் 26, 27 தேதிகளில் தமிழிலும் ஆங்கிலத்திலும் நடைபெற்ற அய்யாவின் சத்சங்கத்தில் கலந்து கொண்ட அனைவருமே பயனடைந்தனர்.

இதனைத் தொடர்ந்து ஆகஸ்ட் மாதம் 15 ஆம் தேதி முதல் 18 ஆம் தேதி வரை சேலம் ஸ்ரீ பகவத் பவனில் நான்கு நாள் ஞான முகாமும் நடைபெற உள்ளது. இத்தகவலை தாங்களும் பயன்படுத்திக் கொண்டு அனைவருக்கும் தெரிவித்து அவர்களும் பயனடையச் செய்யுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

ஞானம் உலகெங்கும் ஒலிக்கட்டும்!

விடுதலை அனைவரின் உள்ளத்திலும் ஒளி வீசட்டும்!!

## உதவியாளர்கள் தேவை

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுக்கு உடன் இருந்து உதவ உதவியாளர் தேவை. கார் ஓட்ட தெரிந்தவராகவும், கணினி (Computer) இயக்க தெரிந்தவராகவும் இருப்பது அவசியம்.

தொடர்புக்கு
**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்.
**99942 05880, 97891 65555**

# நிகழ்ச்சி நிழல்கள்

ஜுன் ஞான முகாமில் கலந்து கொண்டவர்கள்





ஹைதராபாத்தில் நடைபெற்ற சத்சங்கத்தில் கலந்து கொண்ட அன்பர்கள்



ஞான உறுதி முகாமின் போது



மழைக்கொண்டாட்டத்தில் நனையும் அன்பர்கள்



ஐயாவுடன் ஹைதராபாத் அன்பர் திரு. நரேந்திரன் குடும்பத்தினர்



மழைத்தூறலில் ஐயா



கொடம்பக்காடு ஜருகு மலை அடிவாரத்தில் அடர் வனத்தை உருவாக்க விதைப்பந்தை வீசும்போது ...



ஞான உறுதி முகாமின் போது





ஹைதராபாத் தமிழ்சங்கத்தின் General Secretary கிருபானந்தா அவர்கள் ஐயாவை கௌரவித்த போது

# ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு ஒரு மகிழ்வான அறிவிப்பு

நமது ஸ்ரீபகவத் பவன் ஆசிரமம், சேலம், பெரிய கவுண்டாபுரம், கொடம்பக்காட்டில் இயற்கை எழில் மிகு ஜருகு மலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளது.

இங்கு ஒவ்வொரு மாதமும் **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்களின் ஞான முகாம் நடைபெற்று வருகிறது. இதில் பலரும் கலந்து கொண்டு ஞானியாக திரும்பிச் செல்கின்றனர்.

மேலும் ஞான முகாமிற்கு வரும் அன்பர்கள் பலர் குடும்பத்துடன் வரவே விரும்புகின்றனர்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களும் அனைவரும் குடும்பத்துடன் வந்து கலந்து கொள்வதையே விரும்புகிறார்.

ஆனால் குடும்பத்துடன் வரும் அன்பர்களுக்கு தனியறை வழங்கும் அளவிற்கு நம்மிடம் போதிய இடவசதி இல்லை. இதனை பூர்த்தி செய்யும் வகையில் ஐயாவின் ஆலோசனைப்படி நமது அன்பர்களின் விருப்பத்திற்கு இணங்க குடும்பத்துடன் தங்கி செல்ல வசதியான **30 தனி அறைகளை** எல்லா வசதிகளுடன் இயற்கை சூழலோடு கட்ட முடிவு செய்துளோம்.

ஒரு மனிதன் இயற்கையுடன் இணைந்து ஆரோக்கியமாக வாழ்வதற்கு மாசற்ற காற்று, தூய்மையான மழை நீர், இயற்கை உரத்தில் விளைந்த ரசாயனமற்ற உணவு இவை அனைத்தும் தேவை. நாமும் இங்குள்ள இயற்கை வளத்தைக் காக்கும் வகையில் பல புதிய பணிகளை செய்து வருகிறோம். தற்போது மழை நீரையே குடிநீராகவும் சமையலுக்காகவும் வருடம் முழுவதும் பயன்படுத்தி வருகிறோம். மேலும் மழை நீரை வீணாக்காமல் நிலத்தடி நீராக சேமிக்கும் வகையில் சில பணிகளை செய்திருக்கிறோம்.

இதனால் இயற்கை வளம் அனைத்தும் ஒருங்கிணைந்த இடமாக நமது ஸ்ரீபகவத் பவன் அமைந்துள்ளது.

மேலும் ஒரு ஞானியின் அருகாமையில் அவருடன் இணைந்து வாழ்வதற்கான வாய்ப்பு கிடைப்பது மிகவும் அரிது. அந்த அரிய வாய்ப்பு இங்கு தங்கிச் செல்லும் அனைவருக்கும் கிடைக்கும்.

நாம் இங்கு அமைக்கவிருக்கும் 30 தனி அறைகளில் தேவையானவற்றை விருப்பமுள்ளவர்கள் தங்களுக்குச் சொந்தமாக வாங்கி கொள்ளலாம். இதன் விலையாக ஓர் அறைக்கு ரூபாய் 5 லட்சம் என நிர்ணயம் செய்துள்ளோம். இதனை சொந்தமாக வாங்கி கொண்டவர்கள் தங்களது விடுமுறை நாட்களிலும் ஓய்வு நாட்களிலும் குடும்பத்துடன் வந்து தங்கிச் செல்வதோடு ஞானியின் அருகாமையில் தங்கி அவருடன் உரையாடி ஞானத் தெளிவு பெறுவதற்கும் இயற்கை வளத்தை ரசித்து அனுபவித்து ஆரோக்கியமாக வாழ்வதற்கும் ஏற்ற இடமாகவும் இதுஅமைந்துள்ளது.

விருப்பம் உள்ள அன்பர்கள் இதனை வாங்கி பயன்பெறலாம்.

இந்த முப்பது அறைகளின் மூலம் வரும் உபரி தொகையை மூலதனமாக கொண்டு ஸ்ரீ பகவத் மிஷன் வளர்ச்சிப் பணிகளையும் சென்னை ஸ்ரீ பகவத் பவன் கட்டட பணிகளையும் நிறைவு செய்யலாம் என முடிவு செய்துள்ளோம்.

30 அறைகள் மட்டுமே கட்ட இருப்பதால் தேவைப்படுவோர் தங்களது தேவைகளை முன்கூட்டியே தெரிவிக்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். அறையை வாங்கியவர்கள் எப்போது வேண்டுமானாலும் வாங்கிய விலைக்கு மிஷன் மூலமாக மற்றவர்களுக்கு விற்றுக் கொள்ளலாம். எனவே இத் தொண்டில் ஆர்வமுள்ளவர்களும் வாய்ப்பு உள்ளவர்களும் நம்மோடு தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

தொடர்புக்கு

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3. **99942 05880, 97891 65555**

# பாதையில் மலர்ந்த மலர்கள்

வணக்கம். ஸ்ரீ பகவத் ஐயாவுக்கு கோடானக் கோடி நன்றிகள்.

சிறுவயதில் எதற்கெடுத்தாலும் பயம். வயது ஏற ஏற அது கடவுள் பக்தியாகவும், தீவிரமான பூஜைகள், விரதங்கள் என தொடர்ந்தன. கல்லூரி படிப்பு, திருமண வாழ்க்கை, எல்லாமே எனக்கு அகத்தில் ஒரு பயத்துடனே தொடர்ந்தது. என் பயந்த சுபாவத்துக்கு வாழ்க்கை ஒரு சவாலாக தான் இருந்தது.

இதற்கிடையில் என் ஆன்மிக பயணத்தில் அடுத்த மாற்றமாக ஸ்ரீ அரவிந்த அன்னை, பாண்டிச்சேரி உள்ளே வருகிறார். 1990 லிருந்து 2017 வரை ஒரே சிந்தனை. ஆனால் ஓர் ஏக்கம், உள்ளுக்குள்ளே ஒரு தேடுதல். நிறைய புத்தகம் படிக்கிறேன். இருப்பினும் முயற்சி, பயிற்சி நிறைவு பெறாத நிலை.

இந்த நிலையில் 2012ல் ஹீலர் பாஸ்கர் வகுப்பில் கலந்து கொள்ளும் வாய்ப்பு கிடைத்தது. ஐயாவின் ஞான விடுதலை புத்தகம் வாங்கினேன். படித்தேன். மீண்டும் அகத்தில் தேடுதல்.

2015ல் என் கணவர் மறைவு. 2017ல் என் தம்பி மறைவு. என் வாழ்க்கையை மீண்டும் புரட்டி போட்ட காலங்கள். இருவரின் இழப்பு என் தேடுதலை மேலும் தீவிரப்படுத்தியது. விரக்தியின் உச்சக் கட்டம். பிள்ளைகளுடன் அமெரிக்காவில் 2 வருடங்கள் இருந்தாலும் அகத்தில் இமயமலையில் துறவு பூண்ட

முனிவர் எந்த மனநிலையில் இருப்பாரோ அந்த உச்சத்தில் இருந்தேன். ஏதோ ஒரு மாற்றம்... தீவிரம்... ஒரு பக்கம் Divine Mother மறுபக்கம் ஐயாவின் உரையாடல்கள், புத்தகம், படிப்பு.

வானுயர்ந்த மரங்களுக்கு இடையில் பகல் முழுக்க தனிமையில் நடைபயணம். ஐயாவின் வார்த்தைகள். பகல் இரவு தெரியவில்லை. புறத்தில் என் பிள்ளைகளுடன். அகத்தில் தேடுதல். கிட்டத்தட்ட 2 மாதங்கள் தூங்கவில்லை. மீண்டும் மீண்டும் ஐயாவின் பல பதிவுகளை படித்தும் கேட்டும் வந்த நிலையில் "அகம்-புறம்" தலைப்பில் ஐயாவின் உரை என்னுள் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியது. இந்த பிறவிக்கான பெரிய மாற்றம். அதை வார்த்தைகளால் விவரிக்க இயலாது. பெரிய பாரம் இறங்கியதை உணர்ந்தேன். Scientist Archimedes "கண்டுபிடித்துவிட்டேன் கண்டுபிடித்துவிட்டேன்" என்று கத்திக் கொண்டு சாலையில் ஓடியது போல் ஓடவேண்டும் போல் இருந்தது. அப்படி ஒரு சந்தோஷம். இதை புரிதல் ஏற்பட்ட அனைவரும் இந்த உணர்வை பெற்றிருப்பார்கள். என்னைப் பார்த்தவர்கள் என்னிடம் பெரிய மாற்றம் ஏற்பட்டுள்ளதாகக் கூறினார்கள்.

பிறகு ஐயாவை நேரில் பார்த்து நன்றி கூறினேன். ஐயா வாழும் நாளில் வாழ்கிறோம். ஐயாவுடன் வாழ்கிறோம் என்ற மனதிருப்தி. கடந்த ஒரு வருடமாக கடந்த கால எண்ணங்கள் துளியும் இல்லை. எதிர் காலத்தைப் பற்றி எந்த பயமும் இல்லை (சுத்தமாக) நிகழ்காலத்தில் ஒரு குழந்தையைப் போல் சூழ்நிலைக்கேற்ப வாழ்கிறேன். முன்பெல்லாம் எதற்கெடுத்தாலும் Pray பண்ணிக் கொண்டே இருப்பேன் (பயத்தில்). இந்த ஒரு வருடமாக எந்த Prayer ம் இல்லை.

நிறைய பேருக்கு எடுத்து கூறி வருகிறேன். தூங்குவதற்கு தவிர மற்ற நேரங்களில் கண்களை மூடுவதே இல்லை. என் மாற்றம், என் சந்தோஷம், என் தெளிவு, மனதில் கேள்வியற்ற நிலை, பெரிய நிலை. ஐயாவுக்கு நன்றிகள் பலகோடி.

**அபிராமி முருகவேல்,** திருச்சி.




அவன் ஒரு பேரரசன். இயற்கை சீற்றத்தின் கோரப்பிடியான புயலாலும் மழையாலும் அவனது நாட்டைச் சுற்றியுள்ள எல்லைப்பாதுகாப்பு சுவர்கள் முற்றிலும் இடிந்து வலுவிழந்து போய்விட்டன. இது அந்த பேரரசனுக்கு மிகுந்த மன வேதனையை ஏற்படுத்தியது. தன் நாட்டின் எல்லைகள் பாதுகாப்பின்றி இருப்பதால் எப்பொழுது வேண்டுமானாலும் சுற்றியுள்ள அண்டை நாடுகள் போர் தொடுத்து விடுமோ என்ற பயமும் கவலையும் அவனை கலவரம் அடைய செய்தது. எப்போதும் போரைப் பற்றியே நினைத்துக் கொண்டு எதிரி நாடுகளின் படைபலத்தையும் வியூகங்களையும் எண்ணி மன்னனின் மனம் அமைதி இன்றி சதா சிந்தித்துக் கொண்டே இருந்தது.

இதனால் மன்னனின் உடலும் மனமும் வலுவிழந்தது. தூக்கம் மறந்து போனது. மனதில் கவலை நிரந்தரமாக குடி கொண்டது. மன அமைதி காணாமல் போனது. அரசன் ஒற்றர் படைகளை தன்னுடைய நேரடி கண்காணிப்பில் வைத்துக் கொண்டான்.

இந்த நிலையில் மன்னன் நெடுநாளாக பார்க்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்த ஞானி எதிர்பாராத விதமாக அரண்மனைக்கு வந்தார். அவரை அழைத்து அவருக்கு தேவையானவற்றை வழங்கி உபசரித்தான். உணவருந்திய பிறகு "உங்களுடன் தனியே சற்று மனம் விட்டு பேச வேண்டும்" என்றான் அரசன்.

ஞானி "அப்படியே ஆகட்டும்" என்றார்.

மந்திரியை அழைத்து "இன்னும் இரண்டு மணி நேரம் என்னை பார்க்க யாரையும் உள்ளே அனுமதிக்க கூடாது" என்று கட்டளையிட்டுவிட்டு ஞானியுடன் தனிமையில் பேச அமர்ந்தான்.

தன்னுடைய மனம் படும் வேதனைகளை கூறி முடித்து "மனக்கவலையை தாங்கவே முடியவில்லை. எங்கு எப்போது எதைக் கேட்டாலும் பார்த்தாலும் நினைத்தாலும் பயமாகவே இருக்கிறது. மனதில் அமைதி அறவே இல்லை. எல்லா பிரச்சினைகளில் இருந்து விடுபட்டு அமைதி ஏற்பட வழி கூறுங்கள்" என்றான் அரசன்.

ஞானி அரசன் கூறுவதை அமைதியாக கேட்டுக் கொண்டிருந்தார்.

இந்த நிலையில் மந்திரி, அரசனின் கட்டளையையும் மீறி தலைமை ஒற்றனுடன் உள்ளே நுழைந்து அரசனிடம் "அவசரச் செய்தி, நமது ஒற்றர் படைத் தலைவன் உங்களைப் பார்க்க வந்திருக்கிறான்" என்றார்.

அரசன், "யாரும் என்னை பார்க்க வேண்டாம் என்றுதானே கூறினேன்" என்று மந்திரியிடம் அலுத்துக் கொண்டான்.

"அரசே நீங்கள் தான் கூறி இருக்கிறீர்கள். நான் எவ்வளவு முக்கியமான வேலையில் இருந்தாலும், தூங்கிக் கொண்டிருந்தாலும் கூட தலைமை ஒற்றன் வந்தால் சந்திக்க ஏற்பாடு செய்ய வேண்டும். இது அரச கட்டளை

என்று கூறியிருக்கிறீர்கள்" என்பதை பணிவுடன் தெரிவித்துக் கொண்டார்.

மந்திரியின் செயல் முதலில் அரசனுக்கு கோபத்தை ஏற்படுத்தினாலும் பிறகு நிதானத்திற்கு வந்தான்.

சூழ்நிலையை உணர்ந்த ஞானி, "அரசே நான் இங்கு இருக்கலாமா? அல்லது வெளியே சென்று விடலாமா?" என்று கேட்டார்.

அரசன் "சுவாமி நீங்கள் இங்கேயே இருங்கள். நீங்கள் எங்கும் செல்ல வேண்டாம்" என்றான்.

ஒற்றனை கண்களால் பார்த்து அரசன் பேசும்படி சமிக்கை செய்தான். அதை புரிந்து கொண்ட ஒற்றன் பேசத் தொடங்கினான். "அரசே நமது நாட்டின் பாதுகாப்பற்ற எல்லை மூன்று பகுதிகளில் இருக்கும் அண்டை நாடுகளில் 2 அரசர்கள் போர் சம்பந்தமான ஆலோசனையில் ஈடுபட்டுள்ளார்கள். ஒரு நாட்டு அரசன் உங்களுக்கு எந்த வகையில் உதவலாம் என்ற ஆலோசனையில் ஈடுபட்டுள்ளார்" என்றான்.

அரசனுக்கு ஒற்றனின் முதல் செய்தி மிகுந்த மன கலவரத்தையும் இரண்டாம் செய்தி மன ஆறுதலையும் கொடுத்தது.

இதை கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த ஞானி "அரசே நான் உமது மந்திரிக்கும் ஒற்றனுக்கும் சில கட்டளைகளை தெரிவிக்கலாமா?" என்றார்.

"தாராளமாக" என்றான் அரசன்.

மந்திரியையும் ஒற்றனையும் பார்த்து "இனிமேல் அரசனுக்கு மன மகிழ்வைத் தரும் நல்ல செய்திகளை மட்டும்தான் கூற வேண்டும். மன கலக்கத்தை ஏற்படுத்தும் எந்த மோசமான செய்திகளையும் கூறக் கூடாது" என்றார் ஞானி.

உடனே அரசன், "சுவாமி நாட்டைக் காப்பது என் கடமை. மந்திரியும் ஒற்றனும் தங்களது கடமைகளை செய்கிறார்கள். என்னுடைய நாட்டை சிறப்பாக நிர்வாகம் செய்வதற்கு எனக்கு உதவி செய்கிறார்கள். அவர்கள் என்னுடைய அந்தரங்க காரியதரிசிகள். அவர்களுக்கு நீங்கள்இப்படி கட்டளைகளை இடலாமா?" என்றான் அரசன்.

ஞானி, "இப்படித்தான் அரசே... உமது மனமும் செயல்படுகிறது" என்றார். புரியாமல் தவித்தான் அரசன். அரசனுடனிருந்த மந்திரிக்கும் ஒற்றனுக்கும் ஒன்றும் விளங்கவில்லை. அரசன்,"சற்று புரியும்படி விளக்குங்கள் சுவாமி" என்றான்.

ஞானி "மனம் என்பது உங்களது தலைமை ஒற்றனைப் போன்றது. உங்கள் நாட்டின் நலனுக்காக உங்கள் நாட்டைச் சுற்றி நடக்கும் நல்லவைகள் கெட்டவைகள் என அனைத்தையும் உங்களுக்கு உடனுக்குடன் தகவல் தெரிவிப்பது உங்கள் தலைமை ஒற்றனின் முக்கிய கடமை. உங்கள் ஒற்றனின் இந்த பணியை நீங்கள் ஒருபோதும் குறை கூற மாட்டீர்கள். உங்கள் நாட்டின் வளர்ச்சிக்கும் உங்களின் சிறந்த நிர்வாகத்திற்கும் உங்கள் அந்தரங்க காரியதரிசியான ஒற்றனின் தகவலே காரணம் என்பதை நீங்கள் நன்றாக அறிவீர்கள். அப்படித்தானே?"' என்றார்.

"ஆமாம் சுவாமி" என்றான் அரசன்.

"உங்கள் மனமும் நீங்கள் எதிர்கொள்ளும் நிகழ்வுக்கு தகுந்தவாறு உணர்வுகளை வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறது. அந்த உணர்வுகளை நிர்வாகம் செய்வதை விட்டுவிட்டு அதையே தூண்டுகோலாக பயன்படுத்தி புறத்தில் தேவையான செயலை திறம்பட செய்யலாம் அல்லவா. நல்லது கெட்டது என்று தரம் பிரிக்காமல் ஒற்றன் தகவல் தெரிவித்ததை போல் மனம் உணர்வுகளை அப்படியே தெரிவிக்கின்றன...

"மனம் இறைவன் உங்களுக்கு கொடையாக கொடுத்திருக்கும் கருவி. உங்களது அந்தரங்க காரியதரிசியான ஒற்றனை போல் உங்கள் மனமும் செயல்படுகிறது. ஒற்றனின் தகவலைக் கொண்டு நாட்டிற்கு தேவையான சரியான செயலை எப்படி செய்கிறீர்களோ அதை போல் மனம் தெரிவிக்கும் உணர்வுகளை வெறும் தகவல்கள் என்று எடுத்துக் கொண்டு உங்கள் நாட்டில் நல் ஆட்சிக்கும் பாதுகாப்பிற்கும் வளர்ச்சிக்கும் என்ன செய்ய வேண்டுமோ அதைச் சிந்தித்து செயல்படுங்கள். உங்கள் சிறந்த செயலுக்கு காரணமாக அமைந்திருக்கும் உங்கள் மனதை நீங்கள் குறை கூறலாமா?' என்றார் ஞானி.

அரசனுக்கு மின்னல் வெட்டியது போல அனைத்தும் புரிந்தது. ஒற்றனும், மனமும் ஒன்று தான். இரண்டுமே உள்ளதை உள்ளபடி தனக்கு காண்பிக்கின்றது என்பதை புரிந்து கொண்டான்.

'ஒற்றனின் தகவல் எப்படி நாட்டை நிர்வாகம் செய்ய பயன்படுகிறதோ அப்படி மன உணர்வுகளை தூண்டுகோலாக கொண்டு புறத்தில் தேவையான செயலை செய்து கொள்ளலாம். சரியான தகவலை கொடுக்கும் ஒற்றனை நாம் மாற்ற முயற்சி செய்யத் தேவையில்லை. நம் மனம் காட்டும் உணர்வுகளையும் நாம் நிர்வாகம் செய்ய தேவையில்லை. புறத்தில் நல்ல செயல்களை வளர்த்துக் கொள்ளவும் தீமையை அகற்றவும் மனம் உனக்கு உதவி செய்கிறது' என்று கூறி முடித்தார் ஞானி.

அரசன் ஞானியின் கூற்றை முழுவதுமாக உணர்ந்து கொண்டான். அரசனுக்கு மனமே ஒற்றனாக காட்சியளித்தது. ஒற்றனின் கூற்றை எப்படி எடுத்துக்கொள்ள வேண்டுமோ, அப்படித்தான் மனதில் ஏற்படும் உணர்வுகளையும் எடுத்துக்கொள்ள வேண்டும். உணர்வுகளை நிர்வாகம் செய்யாது அதற்கான புற வேலைகளை செய்வது தான் நாட்டிற்கான வளர்ச்சி என்பதை அரசன் நன்றாக விளங்கிக் கொண்டான்.

ஆதரவு தரும் அரசுகளுடன் கை கோர்த்து இணைந்து கொண்டு தனது நாட்டின் எல்லைகளை பலப்படுத்த தீவிரமாக புறதில் செயல்படத் தொடங்கினான் அரசன்.

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 | Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020
Date of publication : First Week of Every Month | Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555